உ

சிவமயம்

ஸ்ரீ ரமண சந்நிதிமுறையின்

# சிறப்புப் பாயிரங்கள்









வெளியிட்டோர்:

ஸ்ரீ ரமண பாதானந்தா

1939

# ஸ்ரீ ரமண சந்நிதிமுறை

பாரத்வாஜி முகவைக் கண்ண முருகனார் இயற்றியது

ஸ்ரீரமண பகவானது திருவடிக்கு அடிமை பூண்டு உருகிப் பாடிய செஞ்சொற் பனுவல்

திருவாசகத்தைப் போலத் தித்திக்கும் தோத்திரநூல்

சில அபிப்பிராயங்கள்:

ஸ்ரீ ராவ்ஸாஹேப் - வித்வான் மு. இராகவையங்கார்: 'இனிய வாக்கும் பொருளமைதியும் நன்கமைந்துள்ளது; ஞானிகள் பலருடைய திருவுளக்கிடைகளும் இத்தோத்திரங்களில் மலிந்து கிடத்தலைக் கண்டு மகிழ்ந்தேன்'.

ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார்: 'வாக்கு மிகத் தெளிவு. மணிவாசகர், வாக்கில் பேசுகிறார். இந் நூல் தமிழுக்கு ஓர் அணிகலன்.'

ஸ்ரீ முதலியார் இராசநாயகம், கொழும்பு: 'ஆசிரியர் பழுத்த புலமை யுடையவ ராதலால் திருவாசக மென்னுந் தேனில் தோய்த்துத் திரட்டிய செழும் பாகுபோல் ஒவ்வொரு செய்யுளையும் யாத்திருக்கின்றார்கள்.'

விலை: ரூ. 2—8—0

கலைமகள் காரியாலயம்—மயிலாப்பூர்

உ

சிவமயம்

## ஸ்ரீ ரமண சந்நிதிமுறை

# சிறப்புப் பாயிரம்

பிரும்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி
திராவிட வித்யாபூஷணம்

டாக்டர் உ. வே. ஸ்வாமிநாத ஐயரவர்கள்

உதவியது

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

அருண்மலி யருணை வாழ்தரு ரமண
னந்தமா முனிவர னகஞ்சார்
இருண்மலி துயரம் போக்கிடுங் கதிரோ
னிணையடிக் கன்புமீ தூர்ந்து
தெருண்மலி சுவையுஞ் செவ்விய நடையுஞ்
சேர்தரு சந்நிதி முறையைப்
பொருண்மலி முகவை வாழ்கண்ண முருகன்
புகன்றனன் யாருமின் புறவே.

—:o:—

## திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்
## ஸ்ரீலஸ்ரீ - சிவஷண்முக மெய்ஞ்ஞான தேசிக சிவாசாரிய சுவாமிகள்
### இயற்றியது

[நேரிசை வெண்பா]

அண்ணா மலைவாழ வாண்டுறைஞா னப்பெரியோன்
உண்ணும் பரஞான மூட்டுவோன்—கண்ணாரும்
சீரமணா மேலோனைச் சேர்சந் நிதிமுறையைப்
பாரறிஞ ரேற்கப் பகர்ந்து. க

சீர்முகவைக் கண்ணா முருகனார் சேர்ந்தநலம்
ஆர்சொல்வ ரிந்த வவனியிலே—ஓர்தலிலா
என்று மழியாத வின்பம் பெறுகவே
என்றுள நாளெல்லா மே. உ

——:o:——

## விழுப்புரம் ஸ்ரீ நடனானந்தர் இயற்றியது

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

அகமதன் பொருளா யருணையங் கிரியார்க்
தடியவ ருயிர்பலி கொடுவாழ்
சுகரம ணேச னின்னருள் வெள்ளத்
தோய்வெனுந் 'தான்பெறும் பேறு
சகமெலாம் பெறவே' யருளினன் ரமண
சந்நிதி முறையெனு மொருநூல்
நிகரறும் முகவைக் கண்ணனற் றவத்தா
னோர்ந்தவம் முருகமா முனியே. க

அகவனற் சதக நீத்தல்விண் ணப்ப
மரியவெம் பாவையம் மானை
நிகரில்பொற் சுண்ணஞ் சாழல்கோத் தும்பி
நிலவுபூ வல்லிதெள் ளேணந்
துகளறு முந்தி பிரார்த்தனை குயில்பாற்
சொற்றபல் பதிகநல் வெண்பா
திகழ்தசாங் கம்பொன் னூசல்தோ ணோக்கந்
திருப்படை யெழுச்சியே சறவு. ௨

தெருடரும் பள்ளி யெழுச்சிநற் புலம்பல்
திருப்படை யாட்சியோ டரிய
பொருடரு மாசை யடைக்கல மச்சோப்
புணர்ச்சியாத் திரையருள் பிடித்த
அருடருஞ் சென்னி யாதிப பதிக
மாம்பல பகுதிகள் வடிவாய்க்
குருபர னருள்கொண் டலதுவெங் கூற்றங்
குதிக்கொணா தெனுங்கருத் துளதாய். ௩

இயம்பரு மினிய சொல்பொரு டொடைமற்
றிசைதொகை நயங்களு முறையோ
டியைந்தவிந் நூலை யினிதரு ளரசை
யெழிற்றிரு வாசகத் தமிழின்
வியன்றருஞ் சீர்சால் வாதவூ ரிறையின்
வேற்றரு வாகவே போற்றிப்
பயன்பெறு மவர்தாட் டுகள்பவப் பிணியும்
பாற்றினா லருமையார் பகர்வார். ௪

தொன்னிலந் தொடங்கு நான்முதற் றோன்றித்
துலங்குபன் னூல்கள்சா ரமதாய்
நன்னயம் பலவுஞ் செறியுமிப் பனுவல்
நண்ணிய தருட்டிறத் தெனலே
என்னறி வுனக்கூ ணுயதா லினியா
னெவன்கொலோ வாழ்வதென் றிந்நூல்
சொன்னவன் றெருத்த குருநதி யொன்றைத்
தூக்கிடத் தெளியுமிவ் வுலகே. ரு

உள்ளதை யுணர்த்தி யுரையுணர் வொழிந்தின்
றுலகெலா முய்ந்திடற் குதவும்
உள்ளது நாற்ப துபதேச சார
முத்தம வான்மவித் தையெனும்
விள்ளரு மறைக ளருள்கெனு மிவன்றன்
விருப்பினுக் கிறைவனும் விரும்பிற்
றெள்ளிய வின்னுன் றிருவருட் பேறுஞ்
சிறப்பிய லியம்புதற் பாற்றே. சு

குலங்குணங் குறிநற் கலையுணர் வொழுக்கங்
குருவரு ளாதிய வெல்லா
நலங்களும் பெறுமிப் புண்ணிய னிடையா
னட்புறச் செய்தநோன் பெற்றோ
மலங்கடுன் கழிநீர் கங்கைதன் புணர்வால்
மான்மியத் தீர்த்தமா வதுபோல்
விலங்கினுங் கடையேன் கடைதவிர்ந் தழியா
விமலவாழ் வெய்தின னன்றே. எ

——:o:——

## ஸ்ரீ கோ. வடிவேலு செட்டியாரவர்கள்

### இயற்றியது

(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

தன்னிலையின் மாறாது சகசநிட்டை
புரிரமண சாமி மீது
பன்னரிய நூலாய்ந்த முருகனார்
பார்ப்பானைப் பார்க்குஞ் சிலர்
நன்னயமா ரினியசொலால் ரமணசந்
நிதிமுறையென் ஞான நூலை
அன்னியமி னிலைமக்க ளமைந்துய்ய
வருளினா ரன்பான் மாதோ.

———:o:———

## ஸ்ரீ ஸ்வாமி சுத்தானந்த பாரதியாரவர்கள்

### உதவியது

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

மலையினும் பெரிய மாண்புடை ரமணன்
சந்நிதி முறையெனுந் திருநூல்
அலையிலா மோன வனந்தமெய்க் கடலில்
அள்ளிய வொள்ளொளி மணியோ?
நிலையிலா வுலகை நீத்தசுத் தான்ம
நிலயத்தை யிலக்குநீள் சுடரோ?
தலையின்மேற் கொண்டு போற்றுவோ மிதனை
நானெனுந் தத்துவ மறிவோம்!

———:o:———

புத்தேரி

ஸ்ரீ எஸ். தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள்

உதவியது

[நேரிசை வெண்பா]

தேவாரப் பாகுந் திருவா சகத்தேனும்
நாவார வுண்டசுவை நல்குமால்—மூவா
முகவையிற் கன்னா முருகன் ரமண
பகவனைப் போற்றுதமிழ்ப் பா.

——:o:——

சிரவணபுரம் கௌமார மடாலயம்

ஸ்ரீலஸ்ரீ - இராமானந்த சுவாமிகள்

இயற்றியது

(சந்தக்கவி)

தானதனத் தன்ன தனன தானன ... தனதான

தாமரையிற் கன்னா ரிருவர் தாமுயல்
போரமைவித் துன்மை யுனாரு மாறுசெய்
தானுவிகத் தன்னு முயிரெ லாநல —முறுமாறே
தாபதரிற் றென்மை யினினி லாவலி
வீதுபதத் தொன்மை யுருவொ டேயிசை
சால்ரமணத் தன்மை யிலகு பேர்கொடு -கனிவோடே;
நாமமகத் தென்னு மவர்க ளவினை
தீர்வரையிற் கன்னி யசன காதியர்
நால்வர்களைத் தன்னி லியலும் யோகமை -தரவாள்சீர்
நாதனெனத் துன்னு குரவன் மீதியல்
ஸ்ரீரமணச் சந்நி திமுறை நூலவிர்
ஞானவிளக் கென்ன வுலக ரோதிட —நுவல்சீர்சால்;

ஆமுகவைக் கண்ண முருக னருள
மாமுகவைக் கண்ண ருபய நாசியி
லாமுகவைக் கண்ண ரரிய நாமுக —வையராமால்
ஆசிரியற் கன்னி யமதெ னவொரு
தேவிலெனப் பன்னு முரநி லாமிவ
ரார்முகவைக் கண்ணர் பிறர்க ளேனைய—ரெனலாமே;
மாமுகவைக் கண்ணன் முருக னரிசை
கூடியுதிப் பின்மை தருநல் வீடெனு
மாரமணைச் செம்மல் பதச ரோசமெய் —துகமேலாம்
வாசகமொத் தின்ன வனுவல் பாவரை
யார்சுடரொத் திங்கி லமிசை யாவரும்
வாழியெனப் பன்னி நலமெ லாமரு வுகமாதோ. க

(சட்டனக் கலித்துறை)

ஆரிய னல்லதொர் தெய்வமின் றென்ன வவனியின்முன்
சீரிய தத்துவ ராயன் றதியிற் றெரிந்தனம்பின்
நாரியல் சீர்முக வைக்கண் ணமுருக னருளன்பிற்
பேரிய சால்ரம ணச்சந் நிதிமுறை பேசினனே. உ

——:o:——

பாரத்வாஜ ஸ்ரீ விசுவநாதசர்மா

இயற்றியது

(கலிவிருத்தம்)

அகத்தாமரை மலர்மீதுறை யருணசல ரமணன்
நகைத்தானுற விழித்தானறச் செகுத்தானென துயிரை
மிகத்தானருள் சுரந்தானென முகவாபுரி முருகன்
செகத்தாருய வகுத்தான்முறை திருவாசக நிகரே.

——:o:——

திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம்
ஸ்ரீலஸ்ரீ - தண்டபாணி சுவாமிகள் குமாரர்
தி. மு. செந்திநாயகம் பிள்ளையவர்கள்
இயற்றியது

(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

அருள்வளருந் திருவருணைக் கிரியின்மிசை யமர்ந்துதவத்
தாற்றன் மேவிப்
பொருள்வளஞ்சே ருலகவிட யங்களைத்தன் னிதயமதிற்
புகுத்தா தன்மைத்
தெருள்வளத்தா லளவறுபே ரின்பவநு பூதிகொண்டு
தினமுந் தொண்டர்
மருள்வளரா தறக்கருணை பொழிரமண குரவனடி
மனத்துட் கொள்வோன். க

செந்தமிழ்விற் பத்திமிகுந் தேனையபா டைகளிதனிற்
சிறந்த வன்றென்
றந்தறிவா லுணர்ந்துபல தெய்வவகை நூல்கள்விரித்
துரைத்தல் யாவும்
இந்தவருட் குரவனலா தில்லையெனு ஞானநிலை
யெய்ந்து பல்பாச்
சொந்தமுறச் சொலித்துதித்துப் பணிந்துவழி படுமகிமை
துலங்குந் தாயன். உ

வாதவூர் முனிவனருட் பெருந்துறையில் வருகுரவன்
வடிவைக் கொண்ட
நீதமெனத் தன்குருவைக் கொண்டுபல கவித்தொடைக
ணிகழ்த்தி நல்லோர்

போதமகிழ் வுறவணிந்து பத்திமிகை யாலவனைப்
புணர்ந்தா னந்தச்
சிதவலைக் கடற்குளித்தான் முகவைவரு முருகனெனுஞ் ௩
சீலன் மாதோ.

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

அன்பினா லருட்பே றடைவதே முறையென்
றறிஞர்தேர்ந் துரைத்தசொற் கிலக்காய்த்
துன்பிலா ரமண சந்நிதி முறைப்போர்
தோய்தர முருகனார் சொலுநூல்
இன்பினை தருகோத் தும்பிதெள் ளேண
மினியபூ வல்லியோ டன்னை
தன்பயில் குயில்பாற் சாற்றுபல் பத்துந்
திருபடை யாட்சிநற் சாழல் ௪

வியன்மிகு பள்ளி யெழுச்சி தசாங்கம்
விளங்குசொற் சதகநல் லகவல்
நயமிகு மச்சோ முதற்பல பகுதி
நவின்றுநல் லுந்தியா லுலகோர்
செயநிகழ் கருமம் பரமெனு நிலையைச்
சிதைத்தருட் பரமனாம் ரமணன்
பெயநிகழ் கருணை மழையினால் யாவும்
பெறுதல்நன் றெனத்தெரித் திடுமே. ௫

தாருகா ரணிய முனிவரர் கருமந்
தனைமுதற் பொருளெனக் கருதித்
திரமார் வேள்வி புரிந்தக மழிந்து
சிவனருட் சீருணார்ந் ததனாற்

பாரகத் தந்தக் கருமந்தான் சடமாம்
பத்தியால் வழிபடு பண்பே
காரண முத்திச் சாதன மென்னக்
கழறுதல் காண்பர்மே லவரே. ௬

——:o:——

## திருவண்ணாமலை முனிஸிபல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

## செந்தமிழ்க் கவி

## ஸ்ரீ இராமச்சந்திரையர் அவர்கள்

## இயற்றியது

(நேரிசை வெண்பா)

புலன்வென்ற மிக்கோரும் புக்கடைய வொண்ணு
வலனின்ற மெய்ஞ்ஞான வள்ளல்—தலநின்ற
முத்தன் ரமண முனிக்கன்ப னுமுருக
உத்தமன்சொன் னூலை யுரை. ௧

மூவ ருளோ முதுவா சகப்பொருளோ
தேவர் புகலுஞ் செழுந்திருவோ—பாவலருக்
கின்னமுதோ வைப்போ வெழிலா ரிரமணன்
முன்சந் நிதிநன் முறை. ௨

புன்குரம்பைப் போர்வையுடற் பொய்ம்மைநிலை நன்குணர்ந்து
மன்குரவற் கன்பிழைத்து மாற்றினன்—இன்பநுகர்
மூப்பார் மொழியு முகவை முருகப்பேர்
மாப்பார் வழுத்து மறை. ௩

——:o:——

## ஸ்ரீ குருசாமி ஐயர் அவர்கள்

(ஆசிரியர், போர்டு ஹைஸ்கூல், இராசீபுரம்)

இயற்றியது

(நேரிசை வெண்பா)

பிறவிப் பிணியகற்றும் பேரின்பஞ் சேர்க்கும்
அறவொழிக்கு மாங்காரப் பேயை—இறைரமணன்
சந்நிதியின் பேரருளைச் சாற்றித் துதிமுருகன்
சொன்முறையாஞ் சோதிச் சுடர்.

——:o:——

## ஸ்ரீ எஸ். கே. சுப்பிரமணியம் அவர்கள்

(*Managing Director, Indo-Lanka Insurance Company Ltd., Madras.*)

இயற்றியது

(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

பொன்னவன்காண் பொறையவன்காண் புரவலரும்
புலவர்களும் போற்றி யேத்தும்
மன்னவன்காண் மறையவன்காண் மகரிஷிமா
ரமணருரை வாய்மை யெல்லாம்
சொன்னவன்காண் தூயவன்காண் தொந்தவினை
தீர்த்தெமக்குச் சுகமே தந்த
தென்னவன்காண் முகவைவரு முருகனு
ரெனும்பெயர்கொள் செல்வன் தானே.

——:o:——

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்
வித்துவச்சிரோமணி அ. குமாரசுவாமிப் புலவரவர்கள்
மாணவரும் குகதாசருமாகிய உடுவில்
தமிழ்ப்பண்டிதர் வ. மூ. இரத்தினேசுவரையர்
இயற்றியது

(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

1. திருமிகுருங் கொடையுடைய தகுதிவளர்
பேரரசர் திகழ்முகவை வருமறையோன்
திருவருள்சேர் ரமணமுனி திருவடியைத்
தியானஞ்செய் முருகதாசன் றமிழ்ப்பாவால்
இருபதாம்நூற் றாண்டிலின்பச் செவ்விதரு
மெழில்நூலா யிலங்குமொரு நூல்தந்தான்
வருபுலவ ரிறுமாந்து தவநெறியுங்
குருவருளும் மதித்துயர்ந்து வாழுமன்னே. க

2. அகவைபல கடந்தரனின் றிருவருளாஞ் சக்தியின
லவனுந் தன்மைத்
தகவுபெறு ரமணரிஷி சாற்றுமுப தேசமொழித்
தத்வந் தன்னால்
முகவைவரு கண்ணமுரு கப்பெரியோன் சந்நிதியின்
முறைமொழிந்தான்
இகலோக வின்பமன்றி யெய்தவரு மந்நெறிக்கு
மியன்ற தாமே. உ

———:o:———

சுபமஸ்து



